இண்டிபெண்டன்ட் ஸப் தாலூகாவாக இருக்க வேண்டும். இப்பொழுது அது ஒரு இண்டிபெண்டன்ட் ஸப் தாலுகாவாக இல்லை. ஆனால் இப் பொழுது பணம் கட்டுவதற்கு வசதி இருக்கிறது.

SRI S. THANGAVELU : அங்கே விவசாயிகளும், வியாபாரிகளும் அதிகமாக இருப்பதனால், சர்க்கார் கட்டணத் தொகைகளைக் கட்டுவதில் நெருக்கடி ஏற்படுவதனால், நிரந்தரமாக அங்கே கஜானாவை அமைப்பது மிகவும் அவசியமாகயிருக்கிறது. இப்பொழுது வாரத்திலே இரண்டொரு நாட்களுக்குத்தான் அது திறந்திருக்கிறது. ஆகவே நிரந்தரமாக இந்தக் கஜானாவை அமைப்பதற்கு சர்க்கார் ஏற்பாடு செய்யுமா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : அப்படி அவசியமாக இருந் தால் அதை ஒரு இண்டிபெண்டன்ட் சப் தாலூகாவாகச் செய்ய வேண்டும். அப்படி இண்டிபெண்டன்ட் ஸப் தாலூகாவாகச் செய்தால் உடனேயே அங்கு ஸப் டிரெஷரி ஏற்படும். எந்த அளவுக்கு அதை ஒரு இண்டி பெண்டன்ட் ஸப் தாலூகாவாகச் செய்ய முடியும் என்று இன்னும் தெரிய வில்லை. விண்ணப்பங்கள் கொடுத்திருந்தால், அவை பரிசீலிக்கப்படும்.

### *House Construction (Javadu Hills)*

*935 Q.—SRI S. M. ANNAMALAI : கனம் பொது மராமத்து அமைச்சர் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

1960-ல் வட ஆற்காடு மாவட்டம் போளூர் தாலுக்கா ஜவ்வாது மலையில் உள்ளவர்களுக்கு எத்தனை வீடுகள் கட்ட அனுமதிக்கப்பட் டுள்ளது ?

THE HON. SRI P. KAKKAN : Ten houses are programmed for construction in the Javadu hills in Polur taluk during 1960–61.

SRI S. M. ANNAMALAI : சென்ற ஆண்டு, அதற்கு முந்தின ஆண்டு களில் செங்கம், திருப்பத்தூர் ஜவ்வாது மலை வாசிகளுக்கு வீடுகள் கட்டித் தரப்பட்டுள்ளன. போளூர் தாலூகாவிலே அதிகமான மலை வாசிகள் இருக்கிறார்கள். அவர்களுக்கு 10 வீடுகள் போதுமா ? எண்ணிக் கையை மேலும் அதிகப்படுத்துவதற்கு அமைச்சர் அவர்கள் முன்வரு வார்களா ?

THE HON. SRI P. KAKKAN : ஆதிவாசிகள் இந்த மாநிலத்திலே எங்கே இருந்தாலும் அங்கே அவர்களுக்கு இம்மாதிரி வசதிகள் செய்து கொடுக்கவேண்டும் என்பதுதான் அரசாங்கத்தின் நோக்கம். கொஞ்சமாக இருக்கிறார்கள் என்ற காரணத்திற்காக அவர்களிடையே பாகுபாடு உண்டாக்கும் நோக்கம் அரசாங்கத்துக்குக் கிடையாது. மத்திய அரசாங்கம் 51 வீடுகள் கட்டிக்கொடுத்தார்கள். திருப்பத்தூர், செங்கம், வேலூர், கனியம்பாடி பிளாக்குகளிலே அவைகளைக் கொடுத்திருக்கிறார்கள். மீண்டும் தேவையானால் அரசாங்கம் உதவி செய்வதற்குத் தயாராயிருக் கிறது.

SRI S. M. ANNAMALAI : செங்கம் தாலூகா, திருப்பத்தூர் தாலூகா ஜவ்வாது மலை வாசிகளுக்கு இரண்டு மூன்று ஆண்டுகளாகத் தொடர்ந்து வீடுகள் கட்டிக்கொடுத்து வருகிறார்கள். ஆனால் போளூர் தாலூகாவிலுள்ள ஜவ்வாது மலை வாசிகளுக்கு 10 வீடுகள்தான் கட்டிக் கொடுக்கப்பட்டிருக் கின்றன. மேலும் 30 வீடுகளாவது கட்டிக் கொடுப்பதற்கு சர்க்கார் முயற்சி எடுப்பார்களா ?

THE HON. SRI P. KAKKAN : கனம் அங்கத்தினர் ஒரு வேண்டுகோள் விடுத்திருக்கிறார்கள். கலெக்டர் பார்த்து மேலும் அதிகமாக வீடுகள் கட்ட வேண்டுமென்று சிபார்சு செய்தால் கவனிக்கப்படும்.

20th March 1961]

**Sri J. MATHA GOWDER :** இந்த மாகாணத்திலே ஆதிவாசிகளுக்கு வீடுகள் ஒதுக்கப்பட்டிருப்பது மிகவும் குறைவாக இருக்கிறது. ஆகையினால் அரசாங்கம் அவர்களுக்கு அதிகமாக வீடுகள் கட்டிக்கொடுப்பதற்கு முயற்சி செய்வார்களா ? எங்கெங்கே ஆதிவாசிகள் அதிகமாக இருக்கிறார்களோ அங்கே அதிகமாக வீடுகள் கட்டிக்கொடுப்பதற்கு ஏற்பாடு செய்வார்களா ?

**The Hon. Sri P. KAKKAN :** இந்த மாநிலத்திலே ஆதிவாசிகள் ஜாஸ்தி இருப்பது ஊட்டி மலையில்தான். அதனாலே அதிகமான வீடுகள் அங்கே கட்டப்பட்டிருக்கின்றன. மேலும் தேவைப்பட்டால், இது கவனிக்கப் படும்.

*Madras Medical Registration Act, 1914 (extension to Kanyakumari)*

* 936 *Q.*—Sri T. T. DANIEL : Will the Hon. the Minister for Revenue be pleased to state—

(*a*) whether the Madras Medical Registration Act, 1914, has been extended to the Kanyakumari district;

(*b*) if so, whether any saving provision has been made in respect of registration of class 'B' practitioners of Allopathy registered under the Travancore-Cochin State Act and who were practising on the date of integration; and

(*c*) if the Travancore-Cochin State Act was not repealed whether the Madras Medical Council and its Registrar have been appointed to function for the corresponding authorities under the Travancore-Cochin Act?

The Hon. Sri M. A. MANICKAVELU : (*a*) No, Sir. The date on which the Act already passed by the Legislature for the extension of the Madras Medical Registration Act, 1914, to the Kanyakumari district, shall come into force has not yet been decided.

(*b*) No, Sir. Class 'B' practitioners of Allopathy registered under the Travancore-Cochin State Act, can, however, continue to practice even after the Madras Medical Registration Act is extended to the transferred areas, provided they do not pose to be registered medical practitioners and use any medical degree.

(*c*) The Travancore-Cochin Medical Practitioners' Act, 1953, will stand repealed when the Madras (Transferred Territory) Extension of Laws Act, 1960 comes into force. The Madras Medical Council and its Registrar have not been appointed to function under the Travancore-Cochin Act.

Sri T. T. DANIEL : Sir, some of the Class 'B' practitioners of Allopathy who applied for getting their names registered under the Travancore-Cochin State Act before the merger of the Transferred Territory, have been served with notice by the Kerala Government that they could not register their names as Kanyakumari has become part of the Madras State. May I know whether these practitioners have got a right to be registered under the Travancore-Cochin State Act especially when our Government have not appointed the Madras Medical Council and its Registrar for that purpose?